*Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 3, itaḻ 31*

*April 20, 1923*

Record no. 148

உ
சிவமயம்.

சென்னை பதிவு எண் ௧௱௦௯ தந்திவிலாசம்:—"Oolian"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

ஆசிரியன்:— ராய. சொக்கலிங்கம்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௩. காரைக்குடி ருத்ரோத்காரி ஸு சித்திரை மீ ௮உ (௨௦—௪—௧௯௨௩) இதழ் ௩௧.

## சோம்பேறிகள்.

### செல்வச்சோம்பேறிகளும் ஏழைச் சோம்பேறிகளும்.

இந்தியாவிலுள்ள மற்ற ஜனங்களைக் காட்டிலும், இந்தியத்தாயின் செல்வத்தை மிகுதிப் பங்காகக் கொண்டு, பிறந்தது முதல் சரியான படுக்கைச் சுகத்தையே யநுபவித்துக் கொண்டிருக்கும் செல்வவான்களை இந்தியாவானது வளர்த்துக்கொண்டிருக்கிறது. அச்செல்வவான்களுள் பலர், இந்து சமூகத்திலுள்ள பலரைக் காட்டிலும் திடகாத்திரமும் நல்ல மூளை பலமுமுள்ளவர்களாகவே காணப்படுகின்றார்கள். இவர்கள் நாட்டுக்கு நலந்தரும் உழைப்புகளில் புகவிட்டால், சமூகத்துக்கு மிகுதியும் உபகாரமாக இருப்பது மாத்திரமன்றி, கஷ்ட வேலைசெய்தும், சரியான வருவாயின்றிக் கஷ்ட ஜீவனம் செய்யும் ஏழை யுழைப்பாளிகளின் மிடியும் ஒருவாறு நீங்கலாகும்.

நாம், தேசாபிமானத்தையும் தொழிலாளிகளையும் கவனித்து மாத்திரம் இதுபேச வரவில்லை. தேசத்தின் பொருளாதார நிலைமையானது சில நூற்றாண்டுகளாகப் புண்பட்டுக்கொண்டிருக்கும்போது, எந்த எந்த முறைகளை யநுசரித்தும் தீவிர உழைப்பாளிகள் தக்க வருவாயின்றிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்போது, வெறுந் திண்ணைத்தூங்கிகளான இவர்கள், தகுதியற்ற—நியாயமற்ற—உழைப்பற்ற—சோம்பேறித் தனமான சுகத்தை யநுபவித்தலைப் பொறுமையோடு இத்தகைய விஷயத்தைப்பற்றிப் பேசப்புகுந்தோம்.

செல்வருட் பலர், தத்துவசாஸ்திர நிபுணர்களாகவும் இலக்கியத்தேர்ச்சி பெற்றவர்களாகவும் இன்னும் இவைபோன்ற புராதனக் கல்வியைப் போற்றுபவர்களாகவும் இருக்கக்காண்கிறோம். அவர்களைப் பற்றியும் நாம் இப்போது பேசவரவில்லை. ஆனால், தம் வமிசத்துப் பூர்விகர்களது பெயரையோ, பொருளையோ கொண்டு மதர்த்து நாட்டு வளப்பமறியாத் தவளைகளாக விருந்து, ஏழைகளையெத்தி யுண்டு உறங்கும் ஒருசிலரையே நாம் கூசாதுபேச வந்தோம். எத்தனையோ உத்தமர்—எத்தனையோ அறிவாளிகள்—எத்தனையோ உழைப்பாளிகள் அடிமை வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கும்போது, பலமும் அறிவும் பொருந்திய இவர்கள் முழுச் சோம்பலில் மூழ்கிக்கிடத்தல் தேசத்துக்கு அவமானத்தை யன்றோ விளைவிக்கின்றது? செல்வமுள்ள இச்சோம்பேறிகள், எத்துறையிலேனும் இறங்கித் தாது உடல் வலியால் உயரறிவால் தொழில் செய்யப் புகுந்தாராயின், இந்தியாவின் பொருளாதாரத்திற் பகுதியைய யல்நாட்டார் கொள்ளைகொண்டேகக் காரணமில்லையாகும். அக்கொள்ளைப் பணம், நம்நாட்டு உழைப்பாளிகளான இவர்க்கும் மற்றோர்க்கும் உழைப்புக் தக்க வேதனமாகப் பங்கிட்டுக் கொடுக்கப் பெறுமல்லவா? அது செய்யாமல் இவர்கள் பணக் குவியலைக் காத்த தூங்குமூஞ்சிப் பேய்களாக இருத்தலினாலன்றோ, அற்ப தனமுடைய அந்நியர்கள் உட்புகுந்து நமக்கலக்கிப் பெரும் பணக்காரர்கள்போற் பெருங்கொள்ளையிட்டேகல் நேர்கின்றது.

இந்தியாவில், பல்லோர்களுடைய அடிமை வாழ்வை யறுப்பதற்கு, கூட்டு வியாபாரமும் கூட்டுத் தொழின்முறையுந்தான் அதிகப்படல்வேண்டும். அத்துறையிலேனும் இவர்கள் இறங்கித் தொழில் செய்யலாம். இந்தியாவின் சொத்தை இந்திய ஜனங்கட்குள் சரிபாகம் செய்து கொடுத்தல் வேண்டுமென்று பல்லோர் பிரயத்தனப்படல் கூடுமேனும், அதல்லாம் தமிப்பிராயம். உலகில் எதனையும் அபேதப்படுத்தல்முடியாத காரியம். தேக சக்தியில் மனோசக்தியில் பெருந்தன்மையில் பசியுண்மையில் எல்லாரும் சரிசமானர்களாக நாம் காணமுடியவில்லை. உலக சரித்திரத்தைப் பார்த்துணர்ந்தாலும் பேதத்தைத்தான் இயற்கை வளர்த்துவந்திருக்கின்றதேயன்றி, அபேதத்தை வளர்த்து வரவில்லை யென்பதுபோதரும். இதுதான் உலக வளர்ச்சிக்கு மார்க்கம் என்பது உண்மையன்றோ? பேதத்தோற்றம் உலக வளர்ச்சியையும் அபேத நோக்கம் உலக அழிவையும் காட்டும். ஆகையால், பொருளாதாரத்தில் பேதமுள்ள நோக்கத்தில் அபேதம் இருத்தல் வேண்டும். ஆகவே, அதிக வருவாயை விரும்புகிறவன், அதிக ஆற்றலோடு அதிகப்பட்டு உழைத்தல் வேண்டும். ஒன்றும் பற்றாதவர்கள்—உழைப்பேது மில்லாதவர்கள் அதிக வருவாயும் சுகமும் கொண்டு வாழ்தல் அநீதியேயாகும். ஆகையால் யாவரும் எத்துறையிலேனும் இறங்கி யுழைத்து நாட்டிற்கும் நாட்டினர்க்கும் தமக்கும் நன்மையைத் தேடுவதே தலைமாகுமென்று நம்புகிறோம்.

இனி, இந்தியாவில் ஒருபெருந்தொகையினர், யாவருக்கும் பயனளிக்குந் தொழில் புரிவதேயில்லை; எனினும், இப்பகுதியினர், சாதாரண உழைப்பாளிகளைக் காட்டிலும் பெருத்த வரும்படி கொண்டு பசியாறவுண்டு பல்குகின்றனர். இவர்கள் பூர்வதனமும் படைத்ததில்லை; பூர்வ அறிவும் அடைந்ததில்லை; ஆனால்; ஆடம்பர வாழ்வுடன் அலைகின்றனர். இத்தகைய பேர்வழிகளை ஏழைச்சோம்பேறிகளென்று நாம் சொல்லுகிறோம். பிறப்பினும் பெருஞ்செல்வம் படைத்து உழைக்காதுண்ணும் அவர்களைச் செல்வச் சோம்பேறிகள் என்கிறோம். இத்தகைய இரண்டு சோம்பேறிகளும் முன்னுக்கு வருங்காலமே தேசம் முன்னுக்கு வருங்காலமாகும்.

சோம்பரைக் காட்டிலும் இழிவைத்தருவது வேறொன்றுமில்லை. சோம்பர் குலத்துக்கும் குணத்துக்கும் இழிவுதந்து தேசத்துக்கும் நாசத்தைத்தரும். சோம்பர் புத்தியை மழுக்கும்; தீய யோசனைகளைத்தரும். ஆன்றோருடன் கூட்டாது; அற்பருடன் அணைவிக்கும். ஆகையால், அச்சோம்பரை மிதித்தேறல் வேண்டும். இயற்கைச் சோம்பேறிகள் செயற்கைச் சோம்பேறிகள் என்னும் இருதிறத்தார்க்கும் ஏற்ற தொழில் காட்டி எழுப்பிவிடல் வேண்டும். அசட்டுத் தர்மஸ்தாபனங்களையும் சோம்பேறிச் சாவடிகளையும் வளர்த்தல்கூடாது. அத்திரவியங்களைப்பறித்து; வித்யாசாலைகளையும் சாஸ்திரக் கழகங்களையும் குருகுலங்களையும் தொழிற்கூடங்களையும்ஏற்படுத்தல்வேண்டும் ஒவ்வொரு செல்வச்சோம்பேறியையும் அவற்றில் பங்குகள் எடுத்துக் கொள்ளவும் உட்புகுந்து உழைக்கவும் வற்புறுத்தல் வேண்டும். அவர்கள் குமாரர்களும் அவர்களது சோம்பர் வழியையயே பின்பற்றிச் செல்லவிடாமல், அச்சாலைகளில்—அக்கழகங்களில்—அக்கூடங்களில் அக் குருகுலங்களில் பழகி வரும்படிக் கட்டாயப்படுத்தல் வேண்டும். ஏழைச் சோம்பேறிகட்கு உழைப்பின்றி எட்டுணையும் போஜனங் கொடுத்தல் கூடாது. இந்தியாவின் பணக்குவியலைத்தேடி யவற்றை மேற்சொன்ன துறைகளிற் கூட்டி, வித்தை தொழில் முதலியவற்றின் மூலம் இந்திய சகோதரர்கட்குள் அவற்றைப் பங்கிடல் வேண்டும். இதுவே நாட்டு நன்மைக்கு நல்ல சாதனமாகும்.

## திலகர் ஸ்வராஜ்ய நிதி.

(ஜில்லா வகையாக)
ஏப்ரில் ௧௦ வரை.

| | | | |
|---|---|---|---|
| சென்னை ரூ. | ௮௩ | ௧ | ௧ |
| செங்கற்பட்டு | ௧௯௩ | ௧௩ | ௧௧ |
| தென் ஆர்க்காடு | ௫௦௩ | ௦ | ௦ |
| வட தஞ்சை | ௫௦௨ | ௫ | ௦ |
| தென் தஞ்சை | ௩௧௫ | ௬ | ௦ |
| திருச்சி | ௧௯௭ | ௨ | ௨ |
| மதுரை (தெற்கு) | ௩௧௮௩ | ௦ | ௦ |
| ராமநாதபுரம் | ௫௭௪ | ௨ | ௦ |
| திருநெல்வேலி | ௧௫௪ | ௦ | ௦ |
| கோயமுத்தூரும்நீலகிரியும் | ௬௮௨ | ௨ | ௦ |
| சேலம் | ௧௩௯௪ | ௦ | ௦ |
| வட ஆர்க்காடு | ௫௭௭ | ௬ | ௦ |
| புதுக்கோட்டை | ௭௩ | ௬ | ௦ |
| மதுரை (வடக்கு) | ௧௧௧௩ | ௬ | ௦ |
| தமிழ்நாட்டுக்கு வெளிப் புறம் | ௫௯௯ | ௧௧ | ௮ |

௧௯௮௨௬—௧௩—௧௦

ஒப்பம்,
எஸ். கஸ்தூரிரங்கையங்கார்,
பொக்கிஷதார்.

## புதியன புகுதலும் பழையன கழிதலும்.

(சென்றவாரத் தொடர்ச்சி)

இளஞ்சிறவர்களின் எண்ணங்களே அவ்வக்காலஉலகங்களாகும். இதனை ஆசிரியர் திருவள்ளுவனார்,

"எவ்வதுறைவது உலகம்உலகத்தோ டவ்வ துறைவதுஅறிவு" எனச்செப்புவா ராயினர்.

இதனை அண்ணாந்து நோக்கல் வேண்டாவா? தலை குனிந்துகொண்டு கண்ணிற்குப் புலப்படுஞ் சிறிது நிலமே உலகம் என்றெண்ணி விடுவதா?

சில முதியோர் நெருநற்றெணையில் காலை மடித்து உட்கார்ந்து வயிற்றைத்தடவிக் கொண்டு தாம்பூலத்தைச் "சப் சப்" என்று மென்றுகொண்டு சிலபேசுவார்கள். "என்னவோ சிறுபிள்ளைகள் குதிக்கிறார்கள்; கதறுகிறார்கள். இவைஎன்ன! நடக்கப் போகின்றனவா? இவற்றைப் போல் எத்தனையோ நாம் கண்டாயிற்று. அவற்றிலே இதுவும் ஒன்று" எனப்பொழுதுபோக்குப் பேச்சுகள் பேசுவார்கள். அவர்களை நாம் ஒன்று கேட்கிறோம். "பெரியோர்களே! நீங்களும் எங்களைப்போலிருந்து சில எண்ணங்களைக்கொண்டு அவ்வெண்ணங்களுடனே முதிர்ந்த முதியவர்களன்றோ? அவ்வெண்ணங்களன்றோ. உங்களை இங்ஙனம் இயம்புவதற்கு அடிப்படையாக உள்ளன. அங்ஙனமே நாங்கள் வேறு சில எண்ணங்களை எண்ணுகின்றோம். அவைகளின் பயனை எங்கள் பிற்கால வாழ்க்கையிற் காண்போம்; அநுபவிப்போம். ஆகையால் உலகப்போக்கைத் தெரிந்துகொண்டு ஒன்றும்—நன்மைசெய்யாவிடினும்—தீமைசெய்தல்வேண்டாம். இவ்வொரு புண்ணியம் ஆற்றினால் அதுவே அமையும் அமையும்."

இவற்றைச் சில முதியோர் ஏற்றுக்கொள்வர்; சிலர் கொள்ளார்; யாதுகூறினும் செவிகொடார்; யாது செய்யினும் கண்விழியார். இவரை என்னென்பது? உயிருள்ள வென்பதா? உயிரில்லவென்பதா? எமக்குத் தெரியவில்லை; யாம்சொல்லவில்லை. ஒரு பெரியார் இன்னார்நிலைமையை ஒரு முறைக்குப் பன்முறைபாய்ந்து தெரிந்து சொல்லுகின்றனர்.

"... ... ... இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொளாக்கண் [விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்"

என்கின்றனர். இம்முட்டைக்குஞ்சுகள், கிணற்றுத்தவளைகள், அனைத்திற்கும் முட்டுக்கட்டைகளாகின்றன. இவருடன் சில இளைஞர்களும் உளர். அன்னோர்க்குப் பெரிதும் இரங்குகின்றோம்.

சகோதரர்களே! இளஞ்சகோதரர்களே! உங்களாலேயே சாதிவழக்கங்கள் சால்புபெறல் வேண்டும்; மதக் கொள்கைகள் மாண்பு கொள்ளல் வேண்டும்; அரசியல் அமைப்புகள் அழகுபெறல்வேண்டும். ஆகையால், நீங்கள் உறுதியாயும் ஊக்கமாகவும் நிற்றல்வேண்டும். உங்கள் வாழ்க்கையின் பயனே பிற்கால சரித்திரத்தில் பொறிக்கப்படும். அதற்குக் காலப் போக்கை யுணர்ந்த கற்றறிவாளர் கழறுவதை கருத்திற்கொள்ளுமின். அவை தொடக்கக்கால் துன்பமாய் இருப்பினும் இறுதியில் மட்டமைகொன்று இன்பம் பயப்பனவையே ஆகும். இறைவன் இப்பொழுது உலகத்தைப் புதுவழியில் இயக்குகின்றான். அது கூர்ந்து நோக்குவோர்க்குப் புலப்படும். இவற்றை மனதிற் கொண்டு பழங்காலைத்தூற்றுமின்; புதுக் காலைவெட்டுமின். (கால்—கால்வாய்) நம் வாழ்நாளில் ஒன்றே செய்ய வேண்டும்; அதுவும் நன்றே செய்ய வேண்டும்; அதுவும் இன்றே செய்ய வேண்டும்; அதுவும் இன்னே செய்ய வேண்டும், அதுவும் மதிக்கச்செய்ய வேண்டும். அதுவும் மாண்புறச் செய்யவேண்டும். அதுவும் மணமாகச் செய்யவேண்டும். அம்மணம் நாடெங்கும் கமழல்வேண்டும். நகரெங்கும் மகிழ்தல்வேண்டும். இம் மண மகிழ்ச்சியே உங்களை வேண்டுவது; வேண்டுவது.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே."

—பவணந்தியார்.

அ. கிருஷ்ணசாமிராயுடு,
பூனைமேடு.



## ஜாதியும் சுதந்தரமும்.

ஸ்வாமி விவேகாநந்தர் பேச்சு.
(ஒரு மொழிபெயர்ப்பு.)

நமது ஸமூகம் ஜாதிப் பிரிவினைகளாற் கட்டப்பட்டிருக்கின்றது. எல்லா ஸமூகங்களும் அப்படித்தான் கட்டிப்பட்டிருக்கின்றன. ஆனாலும், அந்த ஸமூகங்கட்கும் நமது ஸமூகத்துக்கும் சில வித்யாஸங்களிருக்கின்றன.

* * *

இயற்கையில் இரண்டு பெரிய சக்திகள் எதிரிடையாக வேலைசெய்துகொண்டிருக்கின்றன. இந்த இரண்டு பெரிய சக்திகளின் தாக்குதலினாலேதான் உலகில்வேற்றுமையும் ஒற்றுமையும் (பேதமும் அபேதமும்) உண்டாய்க்கொண்டிருக்கின்றன மனித ஸமூகத்தில் இந்த இரண்டு சக்திகளும் எப்போதும் ஜாதி வேற்றுமையை யுண்டாக்கிக் கொண்டிருக்கின்றன; இன்னும் உண்டாக்கிக் கொண்டேயிருக்கும். சமூகத்தில் உண்டாயிருக்கும் ஜாதி வேற்றுமை மாத்திரமல்லாமல் சுதந்தர வேற்றுமையும் கூடவே யுண்டாய்க்கொண்டிருக்கின்றன; இந்த சுதந்தர பேதம் மரணத்தின் சாயை போன்றது.

* * *

இந்த இரண்டு சக்திகளில், ஒன்று சுதந்தர பேதத்துக்கு ஸாதகமாக வேலை செய்து கொண்டிருக்கின்றது; மற்றொன்று; அந்த சக்திக்கு எதிரிடையாக நின்று அதனை யழித்துவிட முயன்று கொண்டிருக்கின்றது.

* * *

பேதமே(வேற்றுமையே) இயற்கைக்கு உயிர்போன்றது. இந்த பேதம் ஜாதி வேற்றுமை) சமூகத்தைவிட்டு என்றும் மறையாமலிருந்து கொண்டிருக்கும். அதாவது, அறிவு ஆற்றல்களில் வித்யாசமுள்ள வரையில், தொழில்களிலும் வேற்றுமை யிருந்துகொண்டுதானிருக்கும். உதாரணமாக, ஒருவன் சமூகத்தையாளும் தகுதியான இயற்கையுடையவனாக இருக்கின்றான்; மற்றவன், செருப்பைக் கூட்டுத் தொழிலுக்குற்ற இயற்கையுடையவனாய் இருக்கின்றான். இக்காரணத்தால், ஸமூகமாளும் சக்தியாய்ந்தவன், உலக சுகங்களெல்லாவற்றையும் அநுபவிக்கக் கூடிய தகுதியுடையவனாக இருக்கின்றான்; மற்றைத் தொழிற்கூட்டு மியல்புடையோன் பசியுடனிருந்துசமூகக்கேட்டுக்கெல்லாம் வேர்போலிருந்து வாழ்கிறான். தற்போது இந்தியாவிலிருக்கும் ஜாதிப் பிரிவின் லட்சக்கணக்காக அதிகப்பட்டாலும், அது தீமையைவிட நன்மையையே அதிகமாகச் செய்யும்; ஜாதிப் பிரிவினைக்குத் தக்கபடி ஒரு தேசத்தின் தொழின் முறைகளும் பல திறப்பட்டுப் பெருகி வளரும். ஆனால், விரோதமும் சண்டையும் சுதந்தர பேதத்தினாற்றான் உண்டாகின்றன. இந்த சுதந்தர பேதச் சச்சரவில் ஒரு தேசம் தனது அஸ்திவாரத்தை யிழக்கக்கூடிய வளவுக்கு துக்கமும் கலக்கமும் அதிகப்படுகின்றன. அத்தேசம் அடையும் அஸ்திவார பலத்துக்கு தக்கபடி, முன்னேற்றமும் அதிகப்பட்டு வளரும்.

* * *

இராஜீயக் கிளர்ச்சி என்று அழைக்கப்படும் போராட்டமானது, சுதந்தரருக்கும் அதில்லாதவருக்கும் தான் நேருகின்றன.

* * *

இந்தப் போராட்டத்தில் தான் இந்தியா தோல்வியுற்று, இப்போது அநேகமாய் இறந்து விட்டதாக வீழ்ந்திருக்கிறது.

* * *

ஆகையினால், இந்தியாவை மற்றத் தேசங்களுடன் சரிசமானமாகக் கொண்டு வரக்கூடிய தகுதியானது, நமது நினைவுக்கு மேற்பட்ட காலத்தி லிருக்கிறது. இந்தியாவானது, தன் வீட்டுக்குள் சமானதையை (சரிசமான சுதந்தரத்தை) ஸ்தாபித்துக் கொள்ளாதவரையில், அது மறுபடியும் ஜீவியத்தைப் பெறும் என்று கொள்ளக் கூடிய நம்பிக்கையே யில்லை.

* * *

சுருக்கமாக, பிரம்மக்ஷத்திரிய வைசிய சூத்ரரென்னும் சமூகப் பிரிவினைகள் குற்றந் தருவன வல்ல; ஆனால் அவற்றில் தவறாக விளைந்து கொண்டிருக்கும் சுதந்தர பேதமே பெருந்தீவுக்குக் காரணமாக இருக்கின்றது.

* * *

ஆகையினால், நமது அபிப்பிராயமானது ஜாதிப் பிரிவினையை யொழிப்பதில் இல்லை; ஆனால், சமான சுதந்தரத்தை ஸ்தாபிப்பதில்தானிருக்கிறது. நம்முடைய ஜீவிய காலத்தில் நமது உத்தமமான கடமை யென்னவென்றால், பறையன் முதல் எல்லா வகுப்பினர்க்கும் தர்ம அர்த்த காம மோக்ஷங்களாகிற சதுர்வித புருஷார்த்தங்களிலும் சமான சுதந்தரத்தை யுண்டாக்கிக்கொடுப்பதிலே முயன்று வெற்றி பெறுவது தானாகும்.

* * *

மேற்கே யிருந்துவந்து கொண்டிருக்கும் பிரகாசத்தால் இந்தியாவும் சிறிது பிரகாசத்தை யடைந்து கொண்டிருக்கின்றது. மேற்கே சுதந்தர பேதத்தினால் செய்யப்பட்டு வரும் போராட்டங்களும் கலக்கங்களும், தூங்கிக் கொண்டிருக்கும் நம் இந்திய தேசத்தைத் தாழ்ந்த நிலைமையி லிருந்து மேலேற்றக் கூடிய நம்பிக்கையைக் கொடுத்து வருகின்றன. மனிதருக்கு இருக்கும் பொதுவான உரிமையும் ஆன்ம வெற்றியும் இவை போன்ற அபிப்பிராயங்களும், நமது கஷ்ட காலங்களின் வழியாக வந்துகொண்டு வருகின்றன. தன்னுள்ளும் தாழ்ந்து வீழ்ந்த ஜாதிகளெல்லாம் தமது கஷ்டத்தை யுணர்ந்து கொஞ்சம் யடைந்து வருகின்றன. இவ் விழிப்பு வளர வளர, இத்தலையில் இவ ஜாதிக்குள்ளேயே அடங்கி யொடுங்கிக் கிடக்கும் மதவுணர்ச்சிக ளெல்லாம் மறைந்து மாண்டு போய்விடும். இந்த ஜாதி பேதம்—உரிமைவேற்றுமை புதைந்து யிற் போகப் போக இந்தியாவின் பூர்விகமான—ஆத்ம சம்பந்தமான வைதீகத்தை யழித்து, இந்தியாவையே மறைந்து போகச் செய்துவிடும்.

* * *

ஒரு ஆறு தடையில்லாதவழி சமுத்ரப் பெருகுவது போல, சமூகமும் தடையொன்று மில்லாமல் முன்னேற வேண்டும்.

* * *

"ஸர்வ பக்ஷணியான அக்கினியைப் போன்ற பலமும் சக்தியு முள்ள வொன்றைக் கெடுப்பதற்கு எதனாலும் முடியாது." சுத்தமும் கபால மின்மையும் அறிவும் பொருந்திய சக்தியுள்ள பெரியோர்கள் போகும் வழியையே ஜனமும் பின்பற்றிச் செல்லும். எத்தனைக் கெத்தனை இந்த அரிய குணங்களை நாம் சம்பாதித்துக் கொள்கிறோமோ, அத்தனைக் கத்தனை நமது சமூகத்தில் நமக்கு செல்வாக்கும் அதிகரிக்கும்.

## அசுத்தநீரைச் சுத்தப்படுத்தும் முறை.

நீரைச் சுத்தம் செய்யும் முறை இயற்கையாகவும் செயற்கையாகவும் பல ஏற்பட்டிருக்கின்றன; ஆயினும், நீரைக் கொதிக்கவைத்தெடுத்துக் கொள்ளலே, முக்யமானதாயும் அவசிய மானதாயும் எல்லோரும் தினந்தோறும் செய்யக் கூடியதாயுமிருக்கின்றது. இந்த முறையால், நீரின் கடினத் தன்மையும் நீங்கிவிடுகின்றது. வியாதிகட்குக் காரணமான சிறு புழுக்களும் நாசமாகின்றன. நீரைத் தீங்கு செய்யாத படியாகவும் சுத்தமாகவும் ஆக்கிவிடுகின்றது.

குறிப்பு:—அசுத்த நீரால் வியாதிகள் உண்டாகி விடுகின்றனவே என்று சந்தேகிப்பவர்கள், தங்கள் சாப்பாட்டுப் பாத்திரங்களைத் தினந்தோறும் அசுத்தச் சிட்டுக் கழுவிவந்த சில காலத்தில் உண்மை யறிந்து கொள்ளலாம்.

## உலக நிகழ்ச்சி.

மகாத்மா சிறை புகுந்து இன்றோடு ௩௬௯ நாட்களாகின்றன. (ஹூக நாட்கள் ௩௬)

* * *

பர்மாவில் தேசீயத் தலைவர்களது விஜயத்தால் திலகர் நிதிக்கு க,அ௫,௦௦௦ ரூ. வசூலாயிருக்கிறது.

* * *

ஸ்ரீமான் பால், தற்போது அமிர்த பஜார் பத்திரிகைக்கு அதிபராக நியமிக்கப் பட்டிருக்கிறார் என்று தெரிகிறது.

* * *

லாகூரைச்சேர்ந்த ஸ்ரீமான் சங்கராம் என்பவர் லாகூர் ஹிந்து பெண் பாலர் தொழிற்சாலைக்கென்று ஒரு லட்ச ரூபா நன்கொடை யளித்தளார்.

* * *

சமீபத்தில் சிறையி லிருந்துவந்த ஸ்ரீமான் கிருஷ்ண சர்மாவுக்குத் "திராவிட ரத்னம்" என்னும் பட்டத்தைத் திருவள்ளூர்த் தேசியச் சபையார் அளித்துள்ளார்கள்.

* * *

ஆப்பிரிக்கா இந்தியர்களின் நிலைமையை யறிந்து வருவதற்காக ஸ்ரீமான் ஆண்டிரூஸ் கூடியசீக்கிரத்தில் கிழக் காப்பிரிக்கா போவாரென்று தெரிகிறது.

* * *

இங்கிலாந்தில் ஜனங்கள் மேற் சுமத்தப் பட்டுள்ள வரிச்சுமையிலிருந்து, ௬-கோடி பவுன் வரையில் குறைக்க வற்பாடா யிருக்கின்றதாம்.

* * *

கல்லிடைக் குறிச்சி தமிழ்க் குருகுலம் சேர்மா தேவிக்கு மாற்றப் படுமென்று தெரிகின்றது. அதற்காக ஆங்கே, ௪௩ ஏகர்நிலம் வாங்கப் போவதாகவும் அறிகிறோம்.

* * *

நவீன கவிசக்கரவர்த்தி, காலஞ்சென்ற சி. சுப்பிரமணிய பாரதியாரின் நூல் மூன்றும் பாகம் வெளியாய்விட்டது. இனி ஒவ்வொரு பாகமும் ஆங்கில மாதத்தின் முதல் வாரத்தில் வெளியாகுமாம்.

* * *

திலகர் சுராஜ்ய நிதிக்காக ஏப்ரில் ௧௦ உ வரையில் வசூலானது தொகை ரூபாய் ௧௬,அ௨௪-௩௩-௩௦ ஆகிறது என்று பொக்கிஷதா ராகிய ஸ்ரீமான் எஸ். கஸ்தூரி ரங்கய்யங்கா ரவர்கள் அறிக்கை மூலம் தெரிவிக்கிறார்கள்.

* * *

லண்டன் பாராளு மன்றத்தில் அடிதடி ஏற்பட்டுக் குடியேற்ற நாட்டு உதவி மந்திரி ஸ்ரீமான் ஆர்ம்ஸ்பி, கோர். பலமாகத் தாக்கப்பட்டனர். உயர்ந்த இந்தியாவை ஆள்வோர் கூட்டமிது. என்ன நாகரிகம் பார்த்தீர்களா?

* * *

மீண்டும் கூடிய தருக்கி ஸமாதானக் கூட்டம் திருப்திகரமாக நடக்கிறது. இங்கிலாந்தானது துருக்கிக்கு இணங்கி நடக்கக் கூடிய மனப் பான்மையைக் காட்டி வருகின்றது. ஆனால் பிரான்ஸ் மாறுபட்டு நடக்கின்ற தென்று தெரிகிறது.

* * *

ஏப்ரில் ௩௦-தேதிக்குள் திலகர் நிதிக்கு ௨௫ லட்சம் ரூபாய் வசூலாக வேண்டியிருக்க, இதுவரையில் தாராளமாக வசூலாக வில்லையே யென்று சென்னை நகரவாசிகட்கு, ஸ்ரீமான் எஸ். கஸ்தூரி ரங்கையங்கார் முதலிய எழுவர் மனு மூலம் தெரிவித்திருக்கிறார்கள்.

* * *

பெரியதலைவராகியமகாத்மாமூலம் ஒருகோடி ரூபாய் வசூலானது தான், இதுவரை இத்துணை விரிவாகக் கதரியக்கத்திலும் பிரசாரத்திலும் இன்னும் தேசீய வேலையிலும் ஊக்கங்காட்ட முடிந்ததென்று, கஸ்தூரி ரங்கையங்கார் முதலிய எழுவர் மனு தெருவிக்கிறது.

* * *

இங்கிலாந்தில் பிரதம மந்திரியான போனர்லாவின் அரசாங்கம் முடிவடைந்து விடுமென்றும், பிரான்ஸில் பாயின்கரேயின் அரசாங்கம் முடிவுடைந்து ஸ்ரீமான் லூக்கரே என்பவரைப் பிரதம மந்திரியாகக் கொண்டு ஒரு புதிய ராஜாங்கம் ஏற்படுமென்றும் சொல்லுகிறார்கள்.

* * *

ஏப்ரில் மாதம் ௯உ வரை தமிழ் மாகாணத் தேசீயச் சபைக்கு அங்கத்தினர்களாகச் சேர்ந்தவர்களின் தொகை ௧௪,௭௩௫ என்றும் திலகர் நிதிக்கு வசூலானது ரூபாய் ௧௭, ௩௩௫-௧௩-௬ என்றும் தொண்டர்கள் தொகை ௫௬௧ என்றும் காரிய தரிசி ஸ்ரீமான் கே. எஸ். ஸுப்ரமணியம் திருச்சியி லிருந்து அறிக்கை மூலம் அறிவிக்கிறார்.

* * *

ஒரு பால்யப் பிராணியின் தேகத்திலிருந்து, த்ரவங்கள் உண்டு பண்ணும் அங்கமொன்றை யெடுத்து வயஸான கிழவருடைய தேகத்துக்குள் ஒட்டவைத்ததில் அக் கிழவர் வாலிபராக ஆகிவிட்டனர். இம்முறை திருப்திகரமாக நடத்தக் கூடியதென்று பாரிஸ் வைத்யர் ஸ்ரீமான் வோரனுப் என்பவர் உறுதி கூறுகிறாராம்.

* * *

பாலின் விலை அதிகப் பட்டதனாலேயே தாய்மார்களும் குழந்தைகளும் இறக்கின்றார்கள். இந்தியாவில் சில ஆண்டுகளாக நூற்றுக்கு ஆறு குழந்தைகள் பாலில்லாக் குறையினால் இறந்து படுகின்றன. ஆகையினால் பசுக் கொலையை நிறுத்திப் பாலைப் பெருக்குதல் நமது கடமையென்று கோவை கோஸம் ரக்ஷணைக் கூட்டத்தில் ஸ்ரீமான் சுந்தரராஜையங்கார் சொன்னார்.

* * *

தீண்டாமை யொழித்த லென்பது, அவருடன் ஸம்பந்தஞ் செய்து கொள்வதும் ஸஹபோஜனம் செய்வது மல்லவென்றும், ஆனால், தற்போதைய நிலைமையை யொழித்து விட்டு, "கிட்டவராதே; தீட்டு ஒட்டிக்கொள்ளும்" என்று சொல்லி எந்த ஸநாதனியும் அந்த ஜாதியானை விலக்கக் கூடாதென்றும், அவனையும் ஈச்வர ஸ்ருஷ்டியில் ஒரு சிறந்தவனாக எந்த ஸநாதனியும் கொள்ள வேண்டுமென்றும் திருவண்ணாமலை ஸ்ரீ ரமண மஹரிஷி சொன்னார்களாம்.

* * *

ஏப்ரில் ௧௨-உ பொள்ளாச்சியில் மாலை ௫-மணிக்குக் காற்றும் மழையும் அடித்துப் பல குடிஸைகளின் மேற்கூறைகளும், சிலவீடுகளின் கள்ளிக்கோட்டை ஓடுகளும், பருத்த மரங்களும் தூக்கி எறியப்பட்டதுடன் நில்லாமல், அடுத்த வடுகப் பாளையம் கிராமத்தில் இடிவிழுந்து இரண்டு பிராம்மணப் பெண்களும் ஒரு பிராம்மண வாலிபனும் இறந்து விட்டார்கள். இடியால் ஒரு பனை மரம் கரிந்துவிட்டதென்று கோயம்புத்தூர் "மகாஜன நேசன்" பத்திரிகை எழுதுகிறது.

* * *

"உப்புவரி முன்னம் ௨௨ ரூபாயிலிருந்து ௧௨ ரூபாயாக இறங்கினதற்குக் காரணம் என் அநுபவத்திலறிந்ததை யெழுதுகிறேன். இது கிரமமாக ௨-௩ முறையாகக் குறைக்கப்பட்டது. நான் அப்போது சென்னை உப்பு இலாகாவில் உத்யோகம் பார்த்து வந்தேன். ஏழை ஜனங்கட்குள் வெகு சீக்கிரம் பரவிவந்த குஷ்ட நோயைப் பரீக்ஷித்ததில், உப்பு வரி யேற்றத்தில் உப்பு விலை அதிகப்படவே, ஏழைகள் உப்பைக் குறைத்தும் உப்பில்லாமலும் உணவு கொண்டதனால், அந்நோய் அதிகம் உண்டாயது என வைத்திய நிபுணர்கள் சொல்லவே, அதனை இங்கிலாந்திலுள்ள மேதாவிகளும் சம்மதி கொடுத்தன்மேல் உப்புவரி குறைக்கப்பட்டது" என்று ஒரு நிருபர் "டெய்லி எக்ஸ்ப்ரெஸ்" என்னும்பத்திரிகைக்கு எழுதுகிறார். இதனை அரசாங்கத்தாரும் மந்திரிகளும் வைத்திய நிபுணர்களும் தேசாபிமானிகளும் கவனிப்பார்களா?



## பொதுச் செய்தி.

கண்டவிராயன்பட்டி:—இவ்வூர் ஆத்ம விவேகாநந்த சங்கத்தில், ஸ்ரீமான் ருஷ்ணையரவர்கள் தலைமையில் பல அறிஞர்கள் அரிய விஷயங்களை யுபந்யஸித்தார்கள் என்று ஸ்ரீமான் மூ பெரி. உ. ராமநாதன் செட்டியார் எழுதுகிறார்.

* * *

ஷண்முகநாதபட்டணம்:—பால சுப்பிரமணியர் சங்கச் சார்பில், நிகழும் சித்திரைமீ ௯௨ வெள்ளிக்கிழமை பிற்பகல் ௩-மணிக்கு திருவாளர் க. ந. ராம நல்ல கருப்பன் செட்டியார் தலைமையில் பல அறிஞர் பல அரிய விஷயங்களை மிக உருக்கமாகப் பேசினார்கள். அக்கிராசனரவர்கள் முடிவுரை கூற ௬-மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

* * *

கோநகர் : கற்பக விநாயக கலாசாலை:—இக்கலாசாலையின் இவ்வருஷப் பரீக்ஷையைக் காரைக்குடி, கம்பராமாயணப் பிரசாரகர் ஸ்ரீ மோ. வெ. கோவிந்தராஜையங்காரவர்களும், சொக்கலிங்கம்புதூர், மா. வா. வித்யாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ ரா. இராமமூர்த்தி ஐயரவர்களும் விஜயம்செய்து துந்துபிஸு பங்குனிமீ ௨௯, ௩௦-ம் திகதிகளில் நடத்தினார்கள். தேர்ச்சிக் குறிப்பு எழுதிக் கொடுத்து நல்ல அபிப்பிராயமும் உதவினார்கள். அவர்கள் நன்றிக்கு என்றும் கட்டுப்பாடுடையேம் என்று தலைமையுபாத்தியாயர் எஸ். ஆழ்வாரையங்கார் எழுதுகிறார்.

* * *

கண்டாமாணிக்கம் :— இவ் வூரில் தபால் தந்தி எடுத்துக்கொள்வது காலை ௭-கக்கிடையிலும், பின் ௪௨-டுக்கு இடையிலும் மாற்றப்பெற்றிருக்கிறது. தபால் வரும் நேரம் இன்னுஞ் சரியாக இல்லை. அதிகாரிகள் ஆலோசனையிலிருக்கிறதாம்

ஷஷ்டியப்தபூர்த்தி:—கண்டமாணிக்கம் ஸ்ரீமாந் உல. மெய்யப்பசெட்டியாரவர்களுக்கு அறுபதாம் ஆண்டு நிறைவு சாந்திக் கல்யாணம் பெருந்தொகைப் பொருள் செலவிட்டு மிக விமரிசையாகச் சென்ற பங்குனிமீ ௨௭ம் நாள் நடைபெற்றது. பிராம்மண போஜனம். புரி முதலியனவும், நகர விருந்தும் சிறப்பாக நிகழ்ந்தன. அன்றிரவு கயிலாசநாதசுவாமி கோயிலில். பஞ்சமூர்த்தங்களும் அலங்கார உத்ஸவம் கொண்டருளியது மிகவும் மாட்சியாக இருந்தது என்று ஒருநிருபர் எழுதுகிறார்.

* * *

ஸ்ரீஅகிலாண்டேசுவரி தாடங்கப் பிரதிஷ்டா மஹோத்ஸவம்:—ஸ்ரீ ஜம்புகேசுவர க்ஷேத்திரத்தில் தாடங்கப் பிரதிஷ்டா மஹோத்ஸவத்தைச் செய்துவரும் கிரமத்தை யநுசரித்துத்தற்காலம் ஸ்ரீசக்ர தாடங்கங்கள் ஜீர்ணமாயிருப்பதை யுத்தேசித்து ஷை தாடங்கப் பிரதிஷ்டார்த்தமாய் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதியாகிய ஜகத்குரு கும்பகோணம் ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகளவர்கள் சென்ற காளயுக்திஸு தைமீ ௨௪உ விஜயயாத்திரையாய்ப்புறப்பட்டு அநேக க்ஷேத்திரங்களிலும் புண்ணிய தீர்த்தங்களிலும் விஜயஞ்செய்து யாத்திரையின் உத்தேச பூர்த்தியான ஸ்ரீஅகிலாண்டேசுவரி தாடங்கப் பிரதிஷ்டாமஹோத்ஸவத்தை, ருத்ரோத்காரிஸு சித்திரைமீ ௧௭உ பானுவாரம் சுக்லபக்ஷத் திரயோதசி ஹஸ்த நக்ஷத்திரம் ஹர்ஷண யோகம் கரஜகாணம் கூடிய சுபதினத்தில் உதயாதி ௭-ககுக்கு மேல் ககவ நாழிகைக்குள்ளாக மிதுனலக்கினத்தில் நடத்துவதாக நிச்சயித்திருக்கிறபடியால் பக்தர்களான ஜிஷ்யகோடிகள் யாவரும் ஷை திருவானைக்கா க்ஷேத்திரத்தில் வந்திருந்து ஷைமஹோத்ஸவத்தைச் சிறப்பாய் நடப்பித்து ஸ்ரீ அகிலாண்டேசுவரியை தரிசனம் செய்துகொண்டு ஷை அம்பாளுடைய திவ்யானுக்கிரகத்திற்கும் பாத்திரர்களாக வேண்டுமென்கிற விபரத்தை ஸ்ரீ மஹா ஸந்நிதானத்தி லேற்பட்ட ஆக்ஞையை முன்னிட்டு ஞாபிக்கப்படுகிறது என்று ஸ்ரீ மடம் காரியம் கி. குப்புசாமி அய்யர் அவர்களும், ஸ்ரீ ஜம்புகேசுவரம் தேவஸ்தானம் தர்மகர்த்தர் சா. ராம. சித ராமசாமி செட்டியார் அவர்களும பத்திரிகை மூலம் அறிவிக்கிறார்கள்.

* * *

அமராவதி புதூர் பொங்கல்:—இவ்வூர் அம்மனுக்கு பலிப்பொங்கலிடுவதென உத்தேசித்தார்கள். கொலைப்பலி கூடாதென அன்பர்கள் சொன்னார்கள். ஊராரும் மறுருரும் அதற்கிணங்கி நாளிது மாதம் ௫உ செவ்வாய்க் கிழமையன்று நகரத்தார் நாட்டார் யாவரும் பாற்பொங்கல்வைத்து பாசக்ஷ்க அபிஷேக ஆராதனை விசேஷமாகச் செய்தார்கள். எல்லோரும் சந்தோஷமுடையவர்களாக இருந்தார்கள். ஏழைப் பிராணிகளின் உயிர் ஒன்று கூடப் போகவில்லை. இனி எவ்வருடமும் இதுபோல் பாற்பொங்கலிடுவதென்று தீர்மானித்திருப்பது போற்றத்தக்கது.

* * *

காவடிகள்:—அதே தினத்தில் சர்க்கரைக் காவடி பதினாறு பெயர்கள் எடுத்தார்கள். சைவ அருணாசலமென்பார் சிவன்கோவிலில் பாற்காவடி கட்டி மேளவாத்ய விருதுகளுடன் வெகு ஆவேசத்துடன் புறப்பட்டார். அம்மன்கோவில் எதிரே இரண்டு வண்டி விறகினால் ஆக்கப்பெற்ற தழலில் பிரவேசித்துத் திரும்பத் திரும்பச் சென்றதைப் பார்த்த ஆயிரம் ஜனங்களும் அதிசயமுற்றனர். இக்காரியங்கள் நாஸ்திகனையும் ஆஸ்திகம் பெறச் செய்யும். பக்தி உண்டாவதற்கு இவைகளெல்லாம் ஏற்ற சாதனங்களென்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

* * *

வேந்தன்பட்டி திருவள்ளுவர் வாசகசாலையின் இரண்டாமாண்டு நிறைவு விழா:—நிகழும் ருத்ரோத்காரிஸு சித்திரைமீ ௯௨ (௩-௪-௨௩) வெள்ளிக்கிழமை மாலை ௩-சு மணிக்கு மேலை சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கலாசாலைத் தலைமையாசிரியர் திருவாளர் செல்லய்யாச் செட்டியாரவர்கள் தலைமையிற் கூடியது. கடவுள் வாழ்த்துப் பாடியதும் திருவள்ளுவர் உருவப்படத்திற்குத் தீப ஆராதனை செய்யப் பெற்றது. தலைவரவர்கட்கு ஸ்ரீமாந் பழ. ப. பழனியப்ப செட்டியாரவர்களால் வந்தனோபசாரப் பத்ரம் வாசித்துக் கொடுக்கப் பெற்றது. வாசகசாலை உபகாரியதரிசி ஸ்ரீமாந் மு. அரு. நடராஜன் செட்டியாரால் அறிக்கை படிக்கப்பெற்றது. தலைவரவர்கள் முகவுரை கூறியவுடன் ஸ்ரீமாந் பழ. கரு. ராமலிங்கச் செட்டியாரவர்கள் சமூக விஷயம் என்பதையும் மேலைச் சிவபுரி ஸ்ரீமத் வெங்கட்டராமையரவர்கள் மாமனார் வந்து வழக்குரைத்த படலம் என்பதையும் ஸ்ரீமாந் வெ. சி. பழ. பழனியப்ப செட்டியாரவர்கள் தருமம் என்பதையும் ஸ்ரீமத் கே வி. வைத்தியநாதய்யரவர்கள் அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பதையும், மேலைச்சிவபுரி ஸ்ரீமாந் பழ. சிங்காரவடிவேலவன செட்டியார் திருநீலகண்ட நாயனார் சரித்திரம் என்பதையும் ஒக்கூர் ஸ்ரீமாந் சி. கு. ஆ. சாக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் கல்வி என்பதையும் அழகுற உபந்யசிக்கத் தலைவரவர்களின் இனிய முடிவுரையோடு நன்றி கூறப்பெற்றதும் இரவு ௭-௩௦ மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது என்று உபகாரியதரிசி எழுதுகிறார்.



நாளென்செயும்! வினைதானென்
 செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
 றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
 தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
 வந்து தோன்றிடினே.

—கந்தாலங்காரம்.

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி சித்திரை௴ அஉ

## தனவணிகர் தமிழரே.

"தமிழ்" இந்நாள் இருக்கும் நிலையை யுன்னும் பொழுது, தமிழின் மாண்பையும் அதன்பண்டைப்பெருமையையும் அறிந்த உண்மைத் தமிழ்ப்பெருமக்கள் உள்ளம் உருகுமென்பது ஒருதலை. தமிழகத்துப் பிறந்து தமிழ்பயிலும் தமிழர்கள், தாங்கள் தமிழர்தாம் என்பதைக் கூட வுணராது தயங்கும் காலம் ஒன்று வருமானால், ஒரு மொழிக்கு இதைக்காட்டினும் வேறு என்ன வர வேண்டும்?

தமிழென்பது ஒருமொழி. அம்மொழி வழங்கும் நாட்டிற் பிறந்து அம்மொழி பயில்வோர் அனைவரும் அம்மொழியாளர். பல ஜாதியினர் ஒரு மொழியாளராக விருப்பது இயல்பு. அவ்வாறே தமிழ்மொழியாளருள்ளும் பல ஜாதியாருண்டு. அவருள் நாட்டுக்கோட்டையாரென்ற தனவணிகராகிய நம்மவரும்ஒருவர். நாம், பிறந்த ஜாதியில் தனவணிகர்; பிறந்த மொழியினும் பயின்றமொழியினும்தமிழர்கள். இவற்றை எத்துணை ஆற்றல்படைத்த எவரானும் மறுக்க வியலாது.

அங்ஙனமாக, தனவணிகர், தாங்கள் தமிழர்களல்லரென எண்ணிக்கொண்டிருக்கின்றனர் என்ற செய்தியைக் கேட்க எந்தத் தமிழர்தாம் வருந்தமாட்டார்? இதனை நாம் ஏற்கனவே அறிவோம். சின்னாட்கள் முன்னர் ஒரு தனவைசிய ஜாதியக் கூட்டத்தில் நமது ஆசிரியர் சொற்பெருக்கு நிகழ்த்தியபொழுது "தமிழர்களாகிய நாம்" என்றுமொழிந்ததற்குப்பலர் வருந்தியதாக நாம்கேள்விப் பட்டதுண்டு. இப்பொழுது கோலாலம்பூரிலிருந்து வெளியாகும் "தமிழகம்" என்ற பத்திரிகையில் சென்ற பங்குனி௴ உஎவயில் "செட்டிப்பிள்ளைகள் தமிழர்கள் அல்லவா?" என ஒரு தலையங்கம் வரையப் பெற்றுள்ளது.

அதிற் கூறப்பட்டிருக்கும் விஷயம் உண்மையே. நம்மவர் தாங்கள் தமிழரல்லரெனவும் தமிழ்பேசும் தாங்களல்லாத ஏனைத் தமிழர்தாம் தமிழரெனவும் எண்ணிக்கொண்டிருத்தல் யாவரும் அறிந்ததே. இவ்வெண்ணம் நம்மவர் கொண்டுவிலையினிமித்தம் சென்றிருக்கும் பர்மாவினும் மலேயாவினும் வேறு நாடுகளினுமே மிகுதி. அங்குள்ள நம்மவர், தமிழர்களை வியப்பான பலபல பொருளற்ற பெயர்கொண்டு அழைக்கின்றனர். தாங்கள் தமிழர் அல்லர் எனப்பிரித்து எண்ணிக்கொண்டு தமிழர் தாழ்வுடையவர் என இவர்கள் எண்ணுகின்றனர். இதற்குத்தக்கதொருகாரணமிருக்குமென்று நமக்குத் தோன்றவில்லை. ஏதோ ஒரு காலத்து அறியாமையினால் இவ்வெண்ணம் எழுந்திருக்க வேண்டுமேயன்றிப் பிறிதன்று. இதுவும் நமது தமிழின் தவக்குறை போலும்.

ஆங்கிலங்கற்ற தமிழரிலனேகர் தமிழின் சுவையை அறியப் பாக்கியம் பெறாமையால் தமிழை அறவே வெறுக்கின்றனர். தற்காலத்துத் தமிழ்ப் பத்திராசிரியர்களிற்கூட அநேகர் தமிழ்மொழியில் நாட்டம் செலுத்துகின்றனரில்லை. தமிழை இந்நாள் பெரிதும் வளர்க்கக்கடமைப்பட்டுள்ள— பலவாற்றானும் சவுகரியம்வாய்ந்த நம்மவர் தமிழை ஓம்பாதொழிந்தாது தமிழர் தாழ்வுடையவர் என்றெண்ணிக்கொண்டிருத்தல் ஆகுமோ?

ஆ! தமிழ்மொழியின் பண்டைப் பெருமை யென்ன? அது தற்காலத்துற்ற சிறுமைதானென்ன? தமிழ்மொழியாளர் தாழ்வுடையாரெனத் தமிழரும் எண்ணுவதோ? தமிழ் என்றசொல்லுக்கே இனிமையுடையதென்பதன்றோ பொருள்? "கண்ணுதற் பெருங்கடவுளுங் கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்ந்தது" தமிழ் மொழியோ? பிறமொழியோ? 'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோலினிதாவதெங்குங் காணோம்" என அருட்கவி மொழிந்தது தமிழையன்றோ?

தமிழணங்கே!

பண்டைநாளெண்ணற்றபுகழ்வாய்ந்த வீரர்களையும் ஞானிகளையும் வள்ளல்களையும் புலவர்களையும் பெற்ற நீ, இந்நாள் பேடிகளையும் அறிவிலிகளையும் தரித்திரர்களையும் பிறரையும் பெற்றிருக்கிறாய்! நால்வர், ஆழ்வாராதிய பக்தர்கள் பிறந்தது நின்வயினல்லவா? வள்ளுவர், கம்பர், இளங்கோவாதிய புலவர் பெருமக்களையெல்லாம் பெற்றது நீயல்லவா? இந்நாள் நின்வயிற்றுதித்த மக்கட்கு நின்பெருமை யறியும் ஆற்றலை முதலில் அளிப்பாயாக.

தனவணிகர்களே!!

நீங்கள் தமிழர்களென்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. நாங்கள் தமிழர்கள் என்று தைரியமாகச் சொல்லுங்கள்! பன்முறையும் கூறுகின்றோம். தமிழரென்று சொல்லிக்கொள்ளக் கூசாதேயுங்கள்!! தமிழராகப் பிறக்கத் தவஞ்செய்திருக்க வேண்டுமென்பதை யுணருங்கள்!!! அருமைச் சகோதரர்களே! "நான் தமிழன், நான்தமிழன், நானதமிழன்" என்று பன்முறையும் உரத்துக் கூவுங்கள்!! நீங்கள் தமிழர்களென்பதில் பெருமை பாராட்டிக்கொள்ளுங்கள்!!! ஒருவன் தமிழன் என்ற பெயர்பெறுதல் எளிதிற்கிட்டாது. இத்தமிழன் என்றபெயர் நமது சமயாச்சாரியர்களால் கடவுளுக்குக்கொடுக்கப்படுகிறது. "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" "ஆரியமுஞ் செந்தமிழுமானான் கண்டாய்" "வடமொழியும் தென்றமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்" என் பனவாதி, தேவாரம் என்பதை உணருங்கள்!

---



## இடிமுழக்கம்.

### தாயையறியாத் தறுதலை.

சென்னை உயர்தர நீதிஸ்தலக் (ஹைகோர்ட்டுக்) காரியாலயத்தில் நகல் எழுதும் ஒரு உத்யோகஸ்தர், ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்த ஒரு பத்திரத்துக்கு நகல் எழுதி விட்டு, அதன் கீழ்க்கையொப்பம் தமிழ்ப் பாஷையில் எழுதப்பட்டிருந்த படியால், அதனையும் அப்படியே எழுதி விடாமல், அதன் கீழ், "இந்த இடத்தில் ஒரு அன்னிய பாஷையில் கையொப்பமிடப் பட்டிருக்கின்றது" என்று ஆங்கிலத்தில் ஒரு குறிப்பு எழுதி வைத்தனராம். என்னே! இவரது அறியாமை!! இவர் ஒரு தமிழராக இருந்தும் தமது தாய்ப் பாஷையையும் அறியாத பாவியாக இருக்கின்றனரே. இவர் தாயை யறியாத் தறுதலைபோலும்.

### தமிழ் தாய்மொழி யன்றோ?

தமிழரும் தமிழ்ப் பாஷையை அன்னிய பாஷையென்று சொல்லும்படியான அறியாமை முதிர்ந்து வருவது தமிழர்க்கே அவமான காரியமன்றோ? தென்னாடாகிய தமிழ் நாட்டிற் பிறந்திருக்கும் பிராம்மணர் பிராம்மணரல்லாதார் மிதவாதி அமிதவாதி ஒத்துழைப்போர் ஒத்துழையாதோர் தேசியக் கக்ஷியார் சுராஜ்யக் கக்ஷியார் உத்யோகஸ்தர் உத்யோகஸ்தரல்லாதவர் ஆகிய எல்லோரும் தமிழர் என்னும் வகுப்பினரல்லாமல் வேறு வகுப்பினராகமாட்டார். இவர்தம்முள் ஒருவராகிய அந்தப் பத்திர நகல் உத்தியோகஸ்தருக்கும் தமிழ் தாய்மொழி யன்றோ? இதனை யறியும் உணர்ச்சிகூட இல்லாமலிருந்தது வியப்பினும் வியப்பே!

### நமது கடமை.

இத்தகைய உணர்ச்சி நம்மவரில் தோன்றியிருப்பதற்குப் பல காரணங்களிருக்கின்றன. அக் காரணங்களைக் கணக்கிட்டு அதற் குரியார்களை நோவதில் இனி யாதும் பயனிராதாகலின், இனிமேலாவது நாம், நமது பெரியோர்கள் தேடிவைத்த தெருள் தனமாகிய தமிழ்மொழியைத் தேசியக் கல்வி மூலம் பரவச் செய்து நமது பாரதமக்கள்—தமிழ் மக்கள் தமிழபிமானிகளாகப் பெருமை பாராட்டிக் கொள்ளும்படியாகப் பிரயத்தனப் படுவது நமது கடமை யாகும்.

## ஸ்ரீமான் கிருஷ்ணசுவாமி சர்மா.

காங்கிரஸில் புதிதாக ஏற்பட்டுள்ள ஸ்வராஜ்யக் கக்ஷியானது நாம் ராஜீயத்தில் முற்போக் கடைந்திருக்கின்றோமென்பதற்கு அடையாளமாகுமென்று ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமி சர்மாவும் சொல்கிறாராம். அவர் சிறையி லிருந்து வந்தவுடன் வேலூரிற் பேசிய பேச்சில் இந் நோக்கம் புலப்பட வில்லையாயினும், சென்னைப் பேச்சில் இத்தகைய நோக்கம் வெளிப்படுகின்றது. காங்கிரஸாக குள்ளேயே எத்தனை கக்ஷிகள் ஏற்பட்டாலும் தமக்குக் கவலையில்லையென்று ஸ்ரீமான் சர்மா சொல்லுகிறார்.

### நாம் அபிப்பிராயப் படுகிறோம்.

காங்கிரஸானது சுமார் ஐந்து ஆறு வருஷங்கட்கு முன்னிருந்தது போலப் படித்தவர்களோடு மாத்திரம் நின்று போய்விட வில்லை; படிப்பில்லாத பொது ஜனங்களுடைய கூட்டத்தையும் மிகுதியுடையதாகையால், அப் பொதுஜனங்கள் தாக்ஷிணயத்துக்குக் கட்டுப்பட்டு, சிறு கிராமங்களிலும் சிறு நகரங்களிலும் கக்ஷிப் பிரதிகக்ஷிகளை யுண்டு பண்ணித் தேசிய நோக்கத்துக்கே இடறு கட்டைகளாக ஆய்விடக் கூடுமல்லவா? இந்தக் கக்ஷிபேதம் அவசியம் ஒத்துழையாமையை யழிக்கக் கூடியபடி பொது ஜனங்களிடம் பரவுமென்று உண்மையாய் நாம் அபிப்பிராயப் படுகின்றோம்.

## திலகர் சுராஜ்ய நிதி.

| | |
|---|---|
| மார்ச்சு மாதம் ௧அஉ காரைக்குடியில் உண்டியல் மூலம் ரூ. | ௩௩-௪-௩ |
| காரைக்குடி சா. நா. சா. தெ. ஸ்ரீமாந் சிவராமன் செட்டியாரவர்கள் ரூ. | உரு-0-0 |
| ஷை சா. நா. சா. செ. ஸ்ரீமாந் சாத்தப்பசெட்டியாரவர்கள் ரூ. | கரு-0-0 |
| ஷை சா. நா. சா. அரு. ஸ்ரீமான் மெய்யப்ப செட்டியாரவர்கள் ரூ. | கரு-0-0 |
| மார்ச்சு ௩௧ உண்டியல்மூலம் காரைக்குடிரூ. | ௬-௧-௧ |
| சூம்பியோ முத்து.கரு. ஸ்ரீமான் குமரப்பசெட்டியார்மூலம் மகாத்மாசிறைபுகுந்த தினத்தை முன்னிட்டுவசூலான தொகையில் செலவு ரூ. உ-போக பாக்கி வசூல் ரூ. | ௧உ௫-0-0 |

## தந்திச்செய்தி.

பினாங்கு சித்திரை௴ ௭உ

சென்னை உண்டியல் விலை நூற்று எழுபத்து நான்கு.

ஈயம் விலை நூற்று...

ரப்பர் விலை எழுபத்தொன்று.

இரங்கூன் சித்திரை௴ ௭உ

| | |
|---|---|
| இயந்திர அரசி பெரிது | ௭௦௮ |
| இயந்திர அரிசி சிறிது | ௭௦௫ |
| நெல் | ௬௨௦ |
| வெள்ளை மொச்சை | ௨௭௦ |
| சிவப்பு மொச்சை | ௨௪௫ |
| கடலை | ௨௬௦ |
| உழுந்து | ௩௫௭ |
| அரிசிச்சோளம் | ௨௩௦ |
| கோதுமை | ௭௦௫ |
| தட்டைப்பயறு | ௩௭௦ |
| மொச்சை | ௩௪௫ |
| துவரை | ௩௬௦ |
| உண்டியல் | ௬௭௪ |
| பவுன் | ௧௫—௧௩—0 |
| தங்கம் | ௩௮—௪—0 |
| தவணைவட்டி | 0—௧௪—0 |

பணம் கிதானமாயிருக்கிறது.

சென்னை சித்திரை௴ ௬உ

| | |
|---|---|
| பவுன் விலை க-க்கு | ௧௫ ௧௩ ௩ |
| வெள்ளி ரூபாயெடை க-க்கு | 0 ௧௩ ௬ |

---

இரங்கூன் சா. ராம. அரு. கடை ஸ்ரீமாந் லெ. சோமசுந்தரம்மூலம்காந்தி தினத்தன்று வசூல் ரூ. உஉ-0-0

ஆக வரவு ரூ. ௩௧௧-௧உ-௬0

வை. சுப்பிரமணியஐய்யர்.
தாலுகாத் தேசியச்சபைக் காரியதரிசி.
காரைக்குடி.

## ஹிந்து மதாபிமான சங்கத்திற்கு சம்பாவனை.

கல்லல் ஸ்ரீமாந் நா. வயி. முரு. நா. நா. வயிரவன்செட்டியாரவர்கள் தம் புதல்வனுக்குநடைபெற்ற காப்புக்கட்டுப் புதுமையில் நமது சங்கத்திற்கு ரூபாய் ஐந்து சம்பாவனை செய்து அனுப்பியுள்ளார்கள். அவர்கட்கு நமது நன்றியைச் செலுத்துகின்றோம். காரியதரிசி அழ. அருணாசலம் எழுதுகிறார்.

## தனவைசிய ஊழியர் சங்கத்திற்கு சம்பாவனை.

கல்லல் திருவாளர் நா. வயி. முரு. நா. நா. வயிரவன்செட்டியாரவர்கள் தம் புதல்வன் நாராயணன் காப்புக் கட்டுப்புதுமையில் நமது சங்கத்திற்கு ரூபாய் ஐந்து சம்பாவனை செய்துள்ளார்கள். அவர்களுக்கு நன்றி செலுத்துகிறோம் என்று காரியதரிசி எழுதுகிறார்.

# உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| புதிய நெல் பொதி | கக—0—0 |
| இரங்கூன் உண்டியல் வட்டம் | க—௫உ—0 |
| சென்னை உண்டியல் வட்டம் | 0—அ—0 |

அரசங்கிளை விபத்து:—கல்லுக்கட்டி வடகரையில் கோட்டையூர்ப் பாதைத் திருப்பத்திலிருக்கும் பெரிய அரசமரத்தில் ஒரு பெரிய கிளைபட்டுப்போயிருந்தது போலும். சித்திரைமாதம் சில நாட்களில், அங்குள்ள கடைகளில் சாமான் வாங்க வந்திருந்த ஒரு கோட்டையூர் நகர வைசிய வாலிபர்மேல் அக்கிளை திடீரென்று வீழ்ந்து பொட்டில்பட்டு, உடனே சுருண்டு வீழ்ந்து மூர்ச்சைபோய் விட்டனர். உடனே அங்கிருந்தவர்கள், ஒருவண்டியில் அவ்வாலிபரைப்போட்டுக் கொண்டு, அரசாங்க ஆஸ்பத்திரிக்குப் போனார்கள். அங்கே வைத்தியர் இல்லாமல், நாகநாதபுரத்தில் நடக்கும் ஸமாராதனைக்குச் சாப்பிடப்போய் விட்டாரெனத் தெரிந்தவுடன், அவ்வாலிபர்க்கு மயக்கம் பலமாக இருந்தபடியால், உடனே ஒரு மோட்டார் இயந்திரத்தில் டாக்டர் மேற்படி வைத்தியர் வீடுக்கு அழைத்துப்போய் சிகிச்சை செய்யச்சொன்னார்கள். அங்கு அவர் சிகிச்சையிலிருந்து தம்மூர் போயிருக்கிறார்.

ஸ்தலஸ்தாபனம்:—யூனியன்ஸ்தலஸ்தாபனத்தார் தமது கடமையை நன்றாய்ச் செலுத்தலில் தவறப்படாது. அவர்கள் இவ்வூரில் தமது எல்லைக்குள் பட்டமாங்களைக் கவனித்து வெட்ட வேண்டியதை வெட்டி விற்கவேண்டியதைவிற்றுத் தமது கடமையைச் செவ்வனே நடத்தியிருந்தார்களாயின், இத்தகைய விபத்து உண்டாயிருக்கக்காரணமில்லை. இனிமேலாகிலும், ஸ்தாபனத்தலைவர் தமது சிப்பந்திகளையே நம்பி வாளாவிருந்து விடாமல், தமது கடமையைச் செலுத்தத் தவறார் என்று நம்புகிறோம்.

அரசாங்க வைத்தியசாலை:—ஒவ்வொரு நகரத்திலும் இருக்கும் அரசாங்க வைத்தியசாலை ஏற்படுத்தப்பெற்று நடைபெறுவதெல்லாம், பொதுஜனங்களின் வரிப்பணத்தினாலேதான் என்பது யாவரு மறிந்த விஷயம். அதனை யுண்மைப்படுத்தவே, அரசாங்கத்தாரும், பொதுஜனங்கட்கு எந்த வேளையில் என்ன நேரிடுமோவென்று அச்சாலைவைத்தியருக்கு அச்சாலையிலேயே இடவசதி முதலியவற்றை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார்கள். கடமையை யறிந்த வைத்தியர் எப்போதும் அங்கிருந்துகொண்டே பொதுஜனங்கட்கு ஆதரவாக சிகிச்சை செய்திருக்கிறார்கள். திங்கட்கிழமை நடந்த அவ்வரசங்கிளை விபத்தில், அக்கோட்டையூர் வாலிபர்க்கு, இவ்வூர் அரசாங்கவைத்தியர் சமயத்துக்கு உதவாமைபற்றி வருந்துகிறோம். விசாரித்தபோது, சமாராதனையில்—அதுவும் பந்துக்கள் வீட்டிலுமல்லாமல், ஒரு வியாபாரிச் செட்டியார் நடத்தும் சமாராதனையில்—சாப்பிடச் சென்றிருக்கின்றார் என்ற விஷயம் தெரிந்தவுடன், நமது வயிறு உண்மையில் பகீரென்று எரிந்தது. இத்தகைய அஸ்மாத்தான ஸம்பவங்களில் உதவுவதற்காகவன்றோ, இவர்க்குப் பொதுஜனப் பணத்தை வாரிக்கொடுத்து நியமித்திருக்கிறார்கள். பெருஞ் சம்பளம் பெறும் இப்பெரியாரும ஸமாராதனைச்சாப்பாட்டைத் தேடிச் சென்றது வியப்பாகவும் வருத்தமாகவும் இருக்கிறது. ஏழை நோயாளிகட்கு வருஞ்சமயம் ஆஜரிலிருந்து மருந்து சரியாகக்கொடுப்பதில்லையென்னும் பெருவதந்தி இப்பெரியார் பேர்பட உலாவிக்கொண்டிருக்கிறது. அதற்கு அத்தாட்சியாக இவ்வரசங்கிளைவிபத்து காட்டிவிட்டது. தமது கடமையைச் செவ்வனே செய்யவேண்டும். முடியாவிடின் ஏழை ஜனங்களின் பணத்தைக் கொள்ளை கொள்வதிலிருந்து விலகவேண்டும். யாரேனும் இத்தகைய நியாயத்தைச் சொன்னால், இத்தகையார்கள் (கடமை செய்யாதவர்கள்) நீண்ட கோபங்காட்டித் தமது அதிகாரதோரணையாற் சீறிச் சிலிர்ப்பதும் வழக்கம். "ஐயோ! இத்தகைய விபத்தில் நாம் இருந்து உதவமுடியாமற் போயிற்றே" யென்று இரங்குவது தான் கடமை யறிந்தார் குணம். இனிமேலாவது நமது வைத்திய சகோதரர் தாமுண்ணும் உணவை நினைத்துத் தமது கடமையைச் கவனித்துப் பொதுஜனங்கட்குப் பேருபகாரியாயிருப்பாரென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறோம்.

## கண்டனூர்.

இவ்வூருக்கு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சார்ய ஸ்வாமிகளவர்கள் நாளது சித்திரைமீ ௩உ விஜயம் செய்தார்கள்.

ஷை யூர் நகரத்தார்கள் பெருமுயற்சியால்சுவாமிகளை வரவழைத்து ௬உ வரை இருக்கும்படிவேண்டிக் கொண்டு பிரதிதினமும் பூஜை முதலிய யாவும் வெகுசிறப்பாய் நடத்தி வைத்தார்கள்.

௫ம். இரவு வெகு விமரிசையாய் ஸ்வாமிகளின் ஊர்வலம் நடைபெற்றது. நகரவைசியர்களே ஸ்வாமிகளின் பல்லக்கைத்தூக்கிச்சென்றது நகரத்தாரின் மிகுந்தகுருபக்தியைக் காட்டுகிறது.

ஷை யூர்நகரத்தார்களாலும் மற்றவர்களாலும் சுமார் கஉ000-ரூபாய் வரை காணிக்கைசெலுத்தப் பெற்றதாகவும் தெரிகிறது.

கோட்டையூர் பள்ளத்தூர் அழகாபுரிபோன்ற பலஇடங்களிலிருந்து நகரத்தார்கள் வந்து தங்கள் தங்கள் ஊருக்கு ஸ்வாமிகளை அழைத்தார்கள். ஸ்வாமிகளவர்களும் திருவானைக்காவில் தாடங்கப்பிரதிஷ்டை முடிவுபெற்ற பின்னர் எல்லா ஊர்களுக்கும் மறுபடியும் விஜயம்செய்ய ஒப்புக்கொண்டுள்ளார்கள் என்று நமது நிருபர் அறிவிக்கிறார்.

## காரைச் சிவனடியார் திருக்கூட்டம்.

துந்துபிஹூ உ௩ உ-யிலிருந்து ருத்ரோத்காரிஹூ சித்திரைமீ ௩உ வரையிலுய்ஷண்முகநாதபுரம் கீரணிப்பட்டி சிறுகூடற்பட்டி விராமதிகிழைச்சிவற்பட்டிஊர்களில் ஸ்ரீமான்களான கெ. விச்வநாத சாஸ்திரிகள், சேவு. மெய்யப்ப செட்டியார், சொ. முருகப்ப செட்டியார், பிச. சுப்பிரமணியன் செட்டியார், மு. அருணசலம் செட்டியார், முத்தரசப்ப செட்டியார், பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியார் முதலிய அன்பர்கள் ஜீவகாருண்யப் பிரசங்கம் செய்தார்கள். மூன்றில் இரண்டு பங்கு ஜனங்கள் சுத்த பூஜையே செய்தார்கள் இதுவரை ௫0,000 துண்டுப் பிரசுரங்கள் வழங்கப் பெற்றிருக்கின்றன. இப்பிரசாரத்தில் உதவி புரிந்த அன்பர்கட்கும் பாற்பொங்கலிட்ட பக்தர்கட்கும் எங்கள் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறோம் என்று ஒரு கா. சிவ. அங்கத்தினர் எழுதுகிறார்.

## மதிப்புரை.

தமிழ்வருஷத் தேதிப்படம் (காலண்டர்):— இது காரைக்குடி ஹிந்துமதாபிமான சங்கத்தாரால் வெளியிடப்பட்டிருக்கின்றது. இது மாதத்துக்கு ஒரு தாளாகப் பன்னிரண்டுதாட்களால் இணைக்கட்டு, ஒவ்வொரு கிழமையிலும் ஆங்கிலத் தேதியும் தமிழ்த்தேதியும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொருதாளிலும் அம்மாதத்து விசேஷதினங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. சென்ற வருஷத் தேதிப்படங்களைப் போலல்லாமல இவ்வருஷம் ஒவ்வொரு மாதத்துப ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்த ஸ்வாமி மகாத்மா காந்தியடிகளாகிய பெரியார்களது திருவுருவப்படங்களும அவ்வுருவப்படங்கட்கு நேரே அவரவரது உபதேச வாசகங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதன் விலைஎப்போதும்போல் ௩-அணாவே தான். மேற்படி சங்கத்தாரிடம் கிடைக்கும்.



## ஒரு கண்டனம்.

அரசாங்கத்தார், தமது அதிகாரச் சார்பில் ஏழைஜனங்களின் பேரிலும் ஏற்றியிருக்கும் உப்பு வரிப்பளுவை நாம் மிகுதியும் கண்டிக்கிறோம்.

உப்பு, வாழ்க்கைக்கு முதன்மையான தென்பதைப் பற்றியாவது, அது நல்லது அல்லது கெட்டது என்பதைப்பற்றியாவது, அது தேக சுகத்துக்குப் பாதககரமா அல்லது சாதககரமா வென்பதைப் பற்றியாவது, அது ஏதேனும் நோயைத் தருமா அல்லது தீர்க்குமா என்பதைப்பற்றியாவது நாம் இங்கு எடுத்துப்பேச வரவில்லை. அது நீண்ட காலப் பழக்கமாக இந்தியரெல்லோராலும் ஆகார வகையிற் சேர்க்கப்பட்டு, ஒவ்வொரு இந்தியக் குடும்பத்துக்கும் இன்றியமையாத பொருளாக அமைந்து கிடத்தலே, நாம் மேலே சொன்னவற்றுக் கெல்லாம் தக்க மறுமொழியைத் தரக்கூடியதாகும். பணக்காரர்களைக் காட்டிலும் ஏழைகட்கு அது (உப்பு) ஒன்றே உணவைச்சுவைப்படுத்தக்கூடிய உயர்ந்த பொருளாக இருக்கின்றது. அது இல்லாவிடில் அவ்வேழைகட்கு உணவுமில்லையென் றெண்ணும்படியான நிலைமையில் அது அமைந்து கிடக்கின்ற தென்பதும் அநுபவ வித்தம்.

இத்தகைய—அவசியமான—ஜீவாதாரமான தொரு பொருளின் மேல் வரிவிதித்தது சரியா? தவறா? என்பது கேள்வி? அது தவறென்றே நாம் சொல்லிக் கண்டிக்கிறோம். ஆனால், ஏற்கனவே அதன் பேரில் மணங்குக்கு ரூ. க-ச-0 வரி இருக்கின்றது; அப்படியிருக்க அதன் பேரில் வரியையதிகப்படுத்தல் உண்மையாகவே கண்டிக்கக்கூடிய விஷயமென்று நாம் கண்டிப்பாய்ச் சொல்லுகிறோம்.

ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகளாலும் அச்சார்புடையாராலும், "அது என்ன? மொத்த ஜனத்தொகையில் தலைக்கு வருஷத்துக்கு மூன்றணாதானே அதிகப்படுத்தப் பட்டிருக்கின்றது" என்பது சொல்லப்படுகின்றது. அவர்கட்கு இவ்வரி மிகமிகத் தாழ்ந்ததாகத் தோன்றுகின்றது போலும். நாம் அதனை வேறு வகையில் நோக்குகிறோம். அரசாங்க அதிகாரிகளும் அவருடைய மந்திரி வர்க்கத்தாரிற் சிலரும், "வரி விதிக்க வேண்டிய அம்சங்களெல்லாம், முடிந்து விட்டபடியால் யாற்றான் இந்த உப்பு வரி விஷயம் எடுத்துக் கொள்ளப்பட்டது" என்று சமாதானம் சொல்லுகிறார்கள். இதைக் கேட்டுச் சிரிப்பதா? அழுவதா? வருந்துவதா? இதிலிருந்து அரசாட்சி முறையின் மர்மம் அல்லவோ வெளியாகின்றது? வரவு செலவு மந்திரி சொல்லும் இவ்விஷயங்களைச் சிறிதேனும் நம்பமாட்டோம். ஏற்றுமதி இறக்குமதி வரிகளெல்லாம் முற்ற முடியப் போட்டாயிருக்கின்றனவா? நிதிச்சாலைகளில் (பாங்குகளில்) சேமித்து வைத்திருக்கும் தனங்களெல்லாம் குறைந்து போகும்படியும், தொழிற்சாலைகளிற் போட்டிருக்கும் முதல்களெல்லாம் அழியும்படியும், நாட்டுப்புறத்து ஏழை ஜனங்களின் ரக்தத்தை யுறிஞ்சிச் சேமித்து வைத்து இருக்கும்வட்டிப்பணங்களும்ஒன்றுமில்லாமல் அழிந்து போகும்படியும் பணக்காரர்கள் மேல் வரிப்பளுவைச் சுமத்தியாய்விட்டதா? இல்லை; இல்லையென்றே எண்ணுகிறோம். பின்னையேன் பிறந்தது முதல் இடுகாட்டுக்குப்போகும்வரையில்மூன்று வேளையாகாரமும்—ஏன்? இரண்டு வேளை யாகாரமுங்கூட—இடைநிறைய உடையும் கொள்வதே யறியாமல், செல்வருக்கே யுழைக்குழைத்துத் திண்டாடி நிற்கும் ஏழைகளின் மீது மோதும்படியான இத்தகைய—வருஷத்துக்கு அணாதானே யென்று மற்றவர்களாற சொல்லப்படுகிற—பாரமான்வரியைக் கட்டாயப்படுத்த அரசாங்கம் முன்னுக்கு வந்திருக்கிறது? மனிதத்தன்மையுள்ள எவனும் இத்தகைய ஏழைகளின் பேரில், வருஷத்துக்கு அரைப்பைசாக்கூட அதிகம் கூட்ட நினைக்கவும் மாட்டானே. வருஷத்துக்கு மூன்றணா வென்பது சிறிய தொகைதான்; சந்தேகமில்லை: ஆனால் அந்த அளவுக்கே கூட்டுவதென்பது பல்லோர்க்கு நூற்றுக்கு நூறு வரியில் அதிகப்படுத்தினதாக முடிகிற தல்லவா? ஏற்படுத்தப்பட்டிருக்கும் அதிக உப்புவரியைச் சிபார்சு செய்து பேசுகிறவர்கள், நூற்றுக்கு நூறு வரிகொடுக்கச் சம்மதிப்பார்களா? அதாவது இப்போது கொடுத்துக் கொண்டிருக்கும் வரிக்கு இரட்டிப்பாகக் கொடுக்கச்சம்மதிப்பார்களா? மூன்றணா வென்பது ஒரு விளையாட்டான தொகைதான். ஆனால், அது ஏழைகளின் விஷயத்தில் அப்படி நினைக்கக்கூடியதல்ல. சிபார்சு பேசுபவர் தங்கள் வருமானத்துக்குச் சமானமான வரியைக் கொடுக்கச் சம்மதிப்பார்களா? இது மனவருத்தத்தைத் தரக்கூடிய விஷயந்தான். என்றாலும், உப்பு வரியையுயர்த்துவதற்குச் சிபார்சுசெய்து ஏழைகளைக் கலக்குவதினும் இது அதிக மனவருத்தந் தரக்கூடியதன்று.

மோட்டார் இயந்திரவண்டிகளிலும் குதிரை வண்டிகளிலும் போகக்கூடியவர்களைத் தாழ்த்திக்காலடையாகச் செல்லும்படி செய்யக்கூடுமேனால், அப்போதுதான், தங்கள் வாழ்நாளெல்லாம் சுகமும் சந்தோஷமும் வாழுவன மேறலும் வேறான ஏழைகளின் மேலும் உப்புவரிப்பளு சுமத்தல் ஒத்துக்கொள்ளக் கூடியதாகும். ஆடம்பர உடைகளால் தம்மை யலங்கரித்துத் திரியும் [illegible] வர்ச் சுமையால், அரையிடைக்கு உடைகட்டிச் செல்லும்படி செய்யப்பட்டாலன்றி, ஏழைகளின்மேல் ஏற்றிய உப்பு வரிச்சுமை பொறுத்துக் கொள்ளல் கூடாததாகும். ஐந்து வேளை—நான்கு வேளை—மூன்று வேளை நல்லுணவு கொண்டு ஏழைகளை வருத்தும் அவர்கள் இரண்டு வேளை அல்லது ஒரு வேளை அரை உணவுகொள்ளும்படியாக அரசாங்கத்தின் வரிவிஷேம் செய்யுமாயின் உப்புவரியின் அதிகச் சுமையையும் ஏழைகள் கொடுக்க வேண்டியது பொருத்தமாகும். ஆகையினால், அந்தக் காலம் வரும்போதுதான் ஏழைகளின் பேரில் வரிச்சுமையை ஏற்றலாமேயொழிய, இப்போதல்ல.

ஒரு அரசாங்கத்தைப்பற்றி அதன் பிரஜைகளிற்றாழ்ந்தவர்களும் அறிந்துகொள்வதற்காக இம்மாதிரியான வரிச்சுமைகளைச் சுமத்துவது உண்மையானால், ஏன் அவ்வரசாங்கமானது, அப்பிரஜைகளை வரிசைப்படநிறுத்தி, "என்னை நீயறிந்துகொள்; எனக்குப்பணிவாயிரு; என்து அதிகாரத்துக்குப் பயப்படு; என் குணத்தை யுணர்ந்துகொள்" என்று ஒவ்வொருவர் முதுகிலும் சவுக்கடி கொடுக்கப்படாது? இப்படி வயிற்றிலடிப்பதைக் காட்டிலும் முதுகிலடிப்பது மேலாகும் போலிருக்கிறது. இதுவே அரசாங்கத்தைப்பற்றி யொவ்வொருவரும் தெரிந்துகொள்வதற்கு வழியாகும். இந்த அரசாங்கத்திலும் இந்தச் சீர்திருத்தத்திலும் திருப்தியுடனிருப்பது எப்படி இயலுமென்பதை மிதவாதிகளைக் கேட்டுத்தான் தெரிந்துகொள்ள வேண்டும். அதிலும் இந்தசமயந்தான் அவர்களது அபிப்பிராயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

## சைகோன் மாரியம்மன் பூசைத் திருவிழா.

இவ்வூர் மாரியம்மன் மிகப் பிரசித்திபெற்று, இந்துக்கள் சீனர்கள் அன்னங்காரர்கள் முதலிய பலராலும் கொண்டாடப்பட்டு வருகிறது. ஆண்டுக்கொருமுறை பூஜை நடக்கும். இப்பூஜையில், [illegible]

மாணிக்க பரம சிவபக்தர்களாகிய நகரத்தார்களும் ஆடுகோழி முதலியவற்றைப் பலிகொடுத்துப் பூஜை நடத்துவது வழக்கம். இவ்வருஷம் இப்படி வீணே பலியிடப்பெறும் பிராணிகளுடைய அவஸ்தையைக் கவனித்து இரக்கங்கொண்டு, அடுத்த வருஷமுதல் இவ்வதைகளைச் செய்யாது நிறுத்திவிடல் வேண்டுமென்று, எல்லோரும் ஒன்றாகக் கூடித் தீர்மானித்தபடியே, அம்பாளின் பாதத்தில் புஷ்பம் வைத்துக் கேட்டனர். அம்பிகை பாற்பொங் கிட்டுப் பாயஸம் பழங்களுடன் அனைவர்க்கும் அன்னம் அளிக்கும்படி அநுக்கிரஹித்தனள். எல்லோரும் மிகச் சந்தோஷமடைந்து அடுத்த வருஷமுதல் அப்படியே செய்வதெனத் தீர்மானித்தனர்.

ஆதியில் இக்கொலையே தெரியாத—மன்னவனைக்கூட வணங்காத—மன்னர்க்குமணிமுடி தரிக்கும்—உயர்ந்த மக்களாகிய தனவைசியர்கள் இடையில் நேர்ந்த சேர்க்கைத் தோஷத்தினால் இதனைக்கைக்கொண்டு, தங்கள் தங்கள் வீடுகளில் மாத்திரமன்றிக் கோயில்களிலும் நடத்தத் தலைப்பட்டு விட்டார்கள். பின்னர்ப் பத்திரிகைகளின் ஏற்படுத்தலாலும் உபந்யாஸங்களாலும் உண்மையையறிந்து வீட்டில் சுத்தபோஜனம் உண்பது கோயில்களிற்பாற்பொங்க லிடுவது என்னும் உத்தம வழக்கத்தைப் பலரும் கைக்கொண்டு வருகின்றார்கள். இன்னும்சில ஊர்களிலும் நகரங்களிலும் அந்தக் கொலைவழக்கு நின்றபாடில்லை. அவர்களும் ஏகமனதாய் நிறுத்திவிடலாகும். மலாக்கா பெரிய மலையிலும் முன்போல் அதிகமில்லையெனச் சொல்கிறார்கள். ஒரு சிறிதையும் விடுத்து வேறுவழியில் பிரபலமாகச் செய்து ஒப்பற்ற ஒருவன் அருளைப் பெறலாமே. இனியாவது அன்பர்கள் இக்கொலையும் கொலைப்பலியுமிடாது ஜீவகாருண்யமாயிருக்கும்படி வேண்டிக் கொள்கிறேன்.

ஜீவகாருண்யன்.

## நோட்டீஸ்.

சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில்:—திருவாடானைபிர்கா, திருவேகம்பத்து தாலூகா சருகணி கிராமத்திலிருக்கும் ஞா. மரியண்ணன்செட்டியாருக்கு இரண்டாவது குமாரனும் முதலாவது குமாரன் ஞானப்பிரகாசம்செட்டியின் தம்பியுமாகிய சூசை செட்டி என்பவன் குடும்பத்தில் ஒற்றுமையில்லாமல் சூதாட்டம் முதலிய துர்நடத்தைகளுக்கு உட்பட்டிருப்பதினால் அவனை எங்கள் குடும்பத்திலிருந்து விலக்கியிருப்பதால் அவனுக்கு யாரும் கடன் இதற்குமுன் கொடுத்திருந்தாலும் பின் கொடுத்தாலும் நாங்களும் எங்கள் சொத்துக்களும் கட்டுப்படாவென்பதை இந்த நோட்டீஸ் மூலம் அறிவிக்கிறோம்.

ஞா. மரியணன் செட்டி.
ஞா. ம. ஞானப்பிரகாசம் செட்டி.

## விளம்பரம்.

மதுரை ஜில்லா பழனியிலும் ராமநாதபுரம் ஜில்லா காரைக்குடியிலும் இருக்கும் வெங்கிடாசலஞ் செட்டியாரவர்கள் குமாரர் வீ. அ. அண்ணாமலை செட்டியார் இதனை சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால்:—

என்னுடைய ஸ்வீகார மகனை அடைக்கலவஞ் செட்டியார் என்ற வெங்கிடாசலஞ் செட்டியார் என்பவன் சுயேச்சையாய் பல காரியாதிகளைச் செய்து பெருத்த நஷ்டங்களை உண்டு பண்ணியும் துன்மார்க்கமான நடத்தையோடும் கூடியிருந்தும் இப்பால் சிலகாலமாக தனியாய் இருந்துகொண்டும் துஷ்டர்கள் சாஹவாசம்செய்துகொண்டும்காரியத்தனமான நடவடிக்கைகளை நடத்திக்கொண்டும்இருக்கிறான். ஆகையால் எனக்குச் செல்லவேண்டிய கடன் வகையறாக்களை யாவரும் அவனிடம் கொடுக்ககூடாது மீறி அவனிடம் செலுத்தி ரசீதுகள் பெற்றிருந்தால் அந்த ரசீதுகள் நம்மைக் கட்டுப்படுத்த மாட்டா. அவனுக்கு நம்முடைய சொத்துக்களைப் பந்தகப்படுத்தவாவது கிரையம் முதலாயின செய்யவாவது பாத்தியமில்லை. ஆகையால் அவனுக்கு வெண் கடனாகவாவது யாதொரு சொத்தின் பேரிலாவது அல்லது கிரையம் ஒத்திமூலமாயாவது—தொகை கொடுக்க கூடாது. மீறிக் கொடுக்கும் பக்ஷத்தில் நம்மையாவது நம்முடைய சொத்துக்களையாவது கட்டுப்படுத்த மாட்டாவென்பதை இதன் மூலமாய் அறிவிக்கலாயிற்று.

வீ. அ. அண்ணாமலை செட்டியார்.







## கம்ப நாடர்.

இப்பெயர் புனைந்து, காரைக்குடியிலிருந்து ஒரு மாத ஸஞ்சிகை விரைவில் வெளியாகும். இது டிம்மி ௧-௮க்கு எட்டு கொண்ட ௬௪-பக்கங்களுடையது. இதில் "வான்மீகரும் கம்பரும்" "கம்பராமாயண ஆராய்ச்சி" "கம்பராமாயணம் சுத்தச் செய்யுட் பதிப்பு" "கம்பராமாயணம் திருத்தமான வசனப் பதிப்பு" என்னும் பகுதிகள் வெளியாகும். ஒவ்வொரு பகுதியும் முடிவில் தனித்தனி புஸ்தகமாக்கிக் கொள்ளக்கூடியபடி மாதந்தோறும் தொடர்ந்த பக்கங்களையுடையது. இதன் வருஷ சந்தா ரூ. ௩—௦—௦. வேண்டுவோர் முன்னதாகவே தங்கள் விலாசத்தைக் கொடுத்துப் பதிவு செய்தல்வேண்டும். முதல் ஸஞ்சிகை வி.பி.-யில் அனுப்பப்பெறும். முன் பணமாகவும் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

மோ. வே. கோவிந்தராஜையங்கார்,
கம்பராமாயணப் பிரசாரகர், காரைக்குடி.

## விளம்பரம்.

உண்மை உத்ஸாகம்உறுதிகளை உள்ளது உள்ளபடி ஆசிரியனைப்போல்எடுத்துப்போதிப்பது எது? பத்மநாதன்- சுவீகாரபுத்திரன்- அர்ச்சுன சந்நியாஸி- லக்ஷ்மிவிஜயம் எனும் நான்கு அரிய பெரிய சமூகச்சீர் திருத்தநூல்களே.

| | |
|---|---|
| பத்மநாதன் | ரூ. ௧—௪—௦ |
| சுவீகாரபுத்திரன் | ரூ. ௦—௧௨—௦ |
| அர்ச்சுன சந்நியாஸி | ரூ. ௦—௧௨—௦ |
| லக்ஷ்மிவிஜயம் | ரூ. ௦—௧௦—௦ |

கிடைக்குமிடம்— சு. பழனியப்பா.
ராமச்சந்திரபுரம். (திருச்சி)

## கதர்.

கதரே நாட்டை காத்திடும் செல்வம்!

நீங்கள் சுத்தமான கதராடையை வாங்கி அணியவேண்டுமானால் எங்களிடம் உள்ள தினுசுகளை வாங்குங்கள். போலிக் கதரை வாங்கி மோசம்போகாதீர்கள்.

எங்களிடத்தில் சுத்தக்கதர் நூலால் நெய்த கெண்டைபோட்ட சேலம் துப்பட்டாக்களும் கும்பகோணம் பட்டுக்கரை சைஸ் வேட்டிகளும் துண்டு சால்வை ஷர்டிங் யின்னும் மற்ற கதர் தினுசுகளும் தேசபக்தர்களது கண்ணாடிபோட்ட படங்களும் சரசமான விலைக்கு கிடைக்கும்.

மானேஜர்,
கந்தவிலாஸ கதர் ஷாப்
பள்ளத்தூர்.

---

## சந்தா விபரம்.

இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷம் ஒன்றுக்கு ... ரு—0—0
சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குவருஷஒன்றுக்கு ... ௬—0—0
தனிப்பிரதி ஒன்றுக்கு ... 0—உ—0

## விளம்பர விவரம்.

மாதம் க-க்குப்பத்தி க-க்கு... உ0—0—0
ஷை அரைப்பத்திக்கு... கக—0—0

காரியஸ்தர்,
தனவைசிய ஊழியன் ஆலயம்,
காரைக்குடி.



ராய. சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில்
அச்சியிட்டுப் பிரசுரஞ்செய்யப்பெற்றது.

